கணபதி துணை.

# விஷப்பிரதி [illegible]திரட்டு.

சுந்தர[illegible]செய்த

# ஆயுள்வேதப் [illegible]

திருமூலர்

# நாடியந்தாதி

[illegible]

[illegible]

இவை

[illegible]

ஆயுள்வேதசபையாரி லொருவராகிய

தில்லையம்பூர்

சந்திரசேகரகவிராசபண்டிதரவர்களால்

ஆராய்ச்சிசெய்யப்பட்ட

பதிப்பிற்கிணங்க

திருமயிலை வி. சுந்தரமுதலியாரவர்களால்

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

1909.

# சாத்துகவிகள்.

இந்து இராஜதானி
வித்தியாசாலையில் தமிழ்த்தலைமைப் புலமைநடாத்திய
இயற்றமிழாசிரியராகிய
திருத்தணிகை
விசாகப்பெருமாளையரவர்கள்
இயற்றிய
நேரிசையாசிரியப்பா.

சீருற்றோங்கிய நீருலகத்தினில்
காரணனியற்றிய வோரிருதிணைகளுள்
வீடுபேற்றிற் கிடனாகிய
மாக்கடமக்கே போக்கறுமாயுள்
வேதமோதிய நீதறுமுதல்வன்
அருள்வழிப்பட்ட தெருளுறுமறிஞர்
பற்பலநூல்களைப் பாங்குடனியற்றி
அப்பெருநூல்களு ளெப்பிணிகளுக்கும்
உததியிற்றோன்றிய வுயிர்தருமருந்தினை
இதமுறுமருந்தை யியம்பினர்பின்னும்
நிலைத்திணையியங்கு திணையஃதென்னும்
உலைத்திடுவிடமிரண் டென்னிலைத்திணையி
னல்வருமிடர்க்குக் காலனுமாற்றை
அறையும்விடப்பிர திவ்விடநூலையும்
விதியுணர்விக்கும் பொதுலக்கணத்தையும்
பெருநூலுணர்ந்த திருமூலர்நாடியும்
எந்நூல்களிவை யேற்றமென்றோர்ந்தே
பன்னூல்களுமுணர் புண்புறுகவிஞன்
சிற்றூராயுள் வேதசங்கத்தின்
உற்றபுலவ னாகவோங்கிய
சந்திரசேகரகவி ராஜபண்டிதனெனும்
சுந்தரக் கவிஞன்றொகுத்த
விந்தையாயச்சில் விளக்கினன்மாதோ.

# சாத்துகவிகள்.

இஃது
சிற்றூர் ஜில்லா
துரைத்தனபாடசாலைகளின் விசாரணைகர்த்தராகிய
நெல்வேலி
முருகேசமுதலியாரவர்களியற்றிய

## கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

புவிராயதிருத்தில்லையம்பூர்ச்சந்திர
சேகரனெனும்புகழ்பூத்தவியற்போர்வாய்ந்த
கவிராயபண்டிதன்னல்லாயுள்வேதர்
கழறவிடப்பிரதிவிடம்பொருநூலோதி
அவிராதவனைநிகர்த்துலகுவக்கவேதே
யசிலிடேவித்தனனுலகிற்சான்றோர்
இவிராதகம்பனொட்டக்கூத்தனாதி
யிவமுனுறின்மின்மினிபோலிழிவர்தாமே. (௧)

உலகில்வளர்மானிடப்பயிர்தழைத்தோங்கிலா
வயார்ஞானபயிலையடைய
உண்மைசேர்சிவஞானக்கருணையப்பெருமழை
பொழிந்திடையிலூற்பத்தியாய்
உலகில்துயர்செய்பிணிக்களைநீக்குமணிமந்தி
ரௌடதக்களையர்தம்மால்
அளியாதிசித்திபெற்றிமெறிஞர்கருணைகூர்ந்
தருந்சேர்பொதுலட்சணம்
இலகுவிடப்பிரதிவிடமெனுங்காவிய
மியற்றினர்பாவிஷைதேயாந்
தேகங்களைந்தாயுள்வேதச்சபைத்தலைவ
ரிச்சித்தபடியச்சினிற்
பலர்புகழ்த்தில்லையம்பூர்ச்சந்திரசேகர
கவிராஜபண்டிதன்
பானுகிரணம்போலயாவருமுணர்ந்திடப்
பதிதமுவெளியாக்கினனரோ. (௨)

## சாத்துகவிகள்.

இந்து - பொன்விளைந்தகளத்தூர்
சங்கீதசாகித்திய வித்வாம்ஸராகிய
இராமசாமி உபாத்தியாயர் குமாரர்
கோவிந்தநாயகரால்
இயற்றப்பட்ட

### நேரிசையாசிரியப்பா.

உலகெலாம்பரவு மொருதனிமுதல்வன்
உயர்வறவுயர்ந்தோ னயர்வறத்தருநம்
பலபடைகையில்லா னப்பெருநிலத்தோன்
பாபத்தால்வருந் தாபத்ரயத்தின்
கோபத்தைநீக்கு மாபத்பாந்தவன்
அதனிதனான வகண்டாகாரன்
அடிநடுமுடிவிலன் படிபுனலெரிகால்
வானும்வற்றிற் றானுமிலங்கும்
தனுவதுமிலனை யிறையுமறிதற்
கவாங்மநகோசர னவாவறுத்தாளு
நித்தியனிர்மலன் றத்துவமூல
காரணனை நாரணனருளால்
மூதுணர்ந்தோர்க ளோதுபன்னூல்கள்
மண்பனைதனைமுக்க வன்பனைக்கொண்டே
அறைக்கனரவற் றுட் சிறந்திடுமாயுள்
வேதமென்னு மோதநீர்க்கடலின்
இலாபங்கண்டு சலாபங்குளித்துச்
சீராய்ந்தெடுத்த நீராருயரான்
மலிபெனவிமைக்கு மணிதிகழ்பெலன்
பாவிலமைத்த பூவுறுபொருளை
இயற்கையானுஞ் செயற்கையானும்
உண்டமாந்தர் கொண்டவிடத்தால்
மன்னுயிர்க்குற்ற வின்னறநீர்க்க
வெல்விஷப்பிரதி விஷத்திரட்டென்னு
நல்விஷயத்வதக் சொல்லுநூலையும்
பொதுலக்ஷணமா மூன்றுநூறன்னையும்
திருமூலராகிய திருமூலர்நாடியும்
மொழியுவந்தாதியின் வழுவறக்களைந்து
கெழீஇயபொருளை வழியறிந்துணரக்
கற்றதனைற்றன் பெற்றபரிசு

எல்லோரும்பெற வல்லோர்மதிக்க
உச்சிதமான வச்சிலியற்றினன்
சிற்றார்யுள் வேதசபைக்கொரு
உற்றதுணைவ ஞகவோங்கிய
செய்யவளுலவுஞ் செய்வாராலுகளும்
அம்பொழிற்றில்லை யம்பூர்வாசன்
சிவனடிபணியுஞ் சிவகுருநாதன்
செய்தவப்பயனல் வையகத்துதித்த
சந்திரசேகர சுந்தரமிகுகவி
ராஜபண்டிதனல் ராஜதானியின்
சிற்றார்ஜில்லா விற்பொருவில்லாப்
பாடசாலையி லீடறுமியற்றமிழ்
ஆசிரியச்சொலு மாசிரியன்
நேயர்சகாயன் தூயநாவலனே.

---

இஃது - துரைத்தனத்தாரேற்படுத்திய
திருப்புத்தூர் ஆற்காடுத்தாலூக்காப் பாடசாலைகளில்
தமிழ்ப்பண்டிதராயிருந்த
காஞ்சீபுரம் கோவிந்த முதலியாரியற்றிய
நிலைமண்டில ஆசிரியப்பா.

திருமலிமாந்தரின் பெருவலியதனைப்
போக்கமருந்துகூர் மீக்கொளுமாயுள்
வேதமோதிய தீதறுமுன்னோர்
ஆய்ந்தெடுத்துரைத்த வேய்ந்தநூலதனுள்
சராசரமென்னச் சாற்றிருவிடத்தில்
அசரவிடத்தி லயர்வோர்தமக்கு
மாற்றுமருந்தின் கூற்றையுரைக்கும்
விடப்பிரதிவ்விட மென்னுநூலையும்
அடற்பெருபொதுவிதி யறையுநூலையும்
அச்சிலியற்றென வாயுள்வேதத்தின்
மெச்சிடுசபையார் வேண்டுகோளின்படி
எல்லையெலாம்புகழ் தில்லையம்பூர்வாழ்
சந்திரசேகர கவிராஜபண்டிதன்
பந்தமாமச்சிற் பதித்தனன்மாதோ.

சாத்துகவிகள் முற்றுப்பெற்றன.

---

# அரும்பதப்பொருளகராதி.

அங்கனை—பெண்.
அடலை—சாம்பல்.
அடுகை—காய்ச்சுதல்.
அட்டு—காய்ச்சி, சமைத்து.
அமலை—சோறு.
அம்புயம்—தாமரை.
அரம்பை—வாழை.
அருணம்—எலுமிச்சை.
அருக்கல்—சுண்டக்காய்ச்சல்.
அவுரி—நீலி.
ஆக்கிநேயம்—விபூதி.
ஆடகம்—துவரை.
ஆண்டு—வருஷம்.
ஆமலகம்—நெல்லி.
ஆயுள்வேதம்—வைத்தியநூல்.
ஆரல்—கார்த்திகை.
ஆருவம்—தண்ணீர்.
ஆன்பால்—பசுவின்பால்.
இதல்—கவுதாரி.
இயற்கை—சுபாவம்.
இருந்தை—மரக்கரி.
இரவங்கம்—வெள்ளீயம், காரீயம்
இன்னா—துன்பம்.
ஈட்டல்—சம்பாதித்தல்.
ஈருள்ளி—வெங்காயம்.
உஞற்றல்—செய்தல்.
உயர்புடம்—பெரும்புடம்.
உவரிநீர்—உப்புநீர்.
உவர்—உப்பு.
உள்ளம்—உள்ளான்.
ஊஞ்சற்பட்டை—சீக்கிராம்பட்டை.
ஊறேன்—ஓர்கொடி.
எகினத்திலை—புளியிலை.
எரண்டம்—ஆமணக்கு.
எனம்—பன்றி.
ஐயவி—கடுகு.
ஓகை—சந்தோஷம்.
ஓடதி—மூலிகை.

கடு—கடுக்காய்.
கதலி—வாழை.
கந்தம்—கிழங்கு, கருணைக்கிழங்கு
கபிஞ்சலம்—காடை.
கரும்பூலிலை—கறுப்புப்பூலாவிலை
கலினி—திப்பிலி.
கறி—மிளகு.
கன்னல்—நாழிகை, கரும்பு.
கன்னற்கட்டி—கரும்பு, வெல்லம்.
கன்னி—வாழை.
காரவல்லி—பாகற்செடி.
காராடு—வெள்ளாடு.
கால்—காற்று.
குக்குடம்—கோழி.
குடிஞைப்புன்கு—ஆற்றுப்புன்கு.
குடிநீர்—கஷாயம்.
குல்லை—துளசி.
குய்—தாளிப்பு.
கூழ்ப்பாண்டம்—பூசுணி, பறங்கி.
கொடுவேலி—சித்திரமூலம்.
கோமயம்—சாணம்.
கோமளம்—பசு.
கோரக்கர்மூலி—கஞ்சா.
கோற்றேன்—கொம்புத்தேன்.
சம்பீரம்—எலுமிச்சை.
சாகினி—சிறுகீரை.
சாலி—நெல்.
சிக்குரு—முருங்கை.
சித்திரபானு—சூரியன்.
சிற்றம்மான்பச்சரி—சிறு அம்மான்பச்சரிசி.
சினம்—படிக்காரம்.
சுண்டி—சுக்கு.
சுரபி, சுரை—பசு.
சுருதிநாயகன்—கடவுள்.
செங்காஞ்சி—சிவப்புமணித்தக்காளி
செனிகை—கடலை.

தசை—மாமிசம்.
தருக்குப்புடம்—நுறைந்தபுடம்.
திலம்—எள்.
துய்க்கல்—சாப்பிடல்.
துருசு—மயிற்றுத்தம்.
தேளமீன்—தேளிமீன்.
தைவேளை—நல்வேளை.
தொடக்கு—தீட்டு.
தொடி—ஒருபலம்.
நங்கை—பெண்.
நறுநெய்—பசுநெய்.
நாகேசரம்—சிறுநாவற்பூ.
நிசி—இராத்திரி.
பஞ்சதாரை—சருக்கரை.
படிறு—பொய்.
பதம்—சோறு, நாழிகை.
புளிநறளை—புளியாரை.
பேராத்தை—தும்பராஷ்டம்.
பொரிகாரம்—வெங்காரம்.
மருதோன்றி—ஐவணச்செடி.
மரை—தாமரை.
மாடம்—உழுந்து.
முந்நாள்—மூன்றுநாள்.
முயங்கல்—கலத்தல்.
மூலம்—கிழங்கு, வேர்.
மேதி—எருமை.
வருக்கை—பலா.
வாரணத்தண்டம்—கோழிமுட்டை
விடத்தேரை—விடத்தாரி.
விடுதல்—நீங்கல்.
வெள்ளுள்ளி—வெள்ளைப்பூண்டு.
வெள்ளை—வெள்ளாடு.
வேய்—மூங்கில்.
வை—வைக்கோல்.

அரும்பதப்பொருளகராதி முற்றிற்று.



சிவமயம்.

# விஷப்பிரதி விஷத்திரட்டு.

## காப்பு.

### கணபதி வணக்கம்.

வெண்பா.

சீரார் கரிமுகத்துச் செம்ம லடிபணிவாம்
பாரார் விஷத்தின் பகைவிஷத்தை—நேராப்
பகர வெமக்குநற் பண்பளித்து மேலாந்
தகைதருக வேண்டுமெனத் தான். (௧)

### பரசிவ வணக்கம்.

சித்தர்பன் னூலிற் றெரிந்துரைத்த தியநஞ்சம்
அத்தனைக்கு மாற்றை யறிந்தெடுத்து—இத்தரையில்
அந்தாதி யாக வறையவே யைம்முகன்றாள்
நந்தாத் துணையா நமக்கு. (௨)

### நூற்பெருமை.

உலகத் துதித்தநாள் கோடிதிக ளுள்ளும்
பலபொருள்க ளுள்ளும் பகையா—நிலவும்
இயற்கை செயற்கையா மின்னுவின் மாந்தர்
உயற்குவகை நூலிதென்றே யோது. (௩)

### எட்டிக்கோட்டைக்குமாற்று.

எட்டிதின் றோர்கட் கெழினுவற் பட்டைதனைத்
தட்டிமரைத் தேகொடுக்கத் தான்றீரும்—வட்ட
மரைக்கிழங்கா மூணுணின் வானிலையின் சாறும்
ஒருக்கடுக்காய் நற்குடிநீ ரோது. (௪)

ஓதவுரி வேர்த்தோ லுடனரைத்துக் கொள்ளப்போம்
தீதிலா வெற்றிலையுந் தின்றுவிடும்—யாதேகேள்
வெந்தயமு நன்மிளகும் வெந்நீரி லேயரைத்து
அந்தவெண்ணெ யிட்டருந்தப் போம். (௫)

## ஊமத்தைக்குமாற்று.

போமேயூ மத்தை புசித்தால் மரைக்கிழங்கைத்
தேமேவு காடிவிட்டுத் தின்னப்போம்—ஆமவுரி
வேராகும் வாந்தி விழவருந்தி வெள்ளழிஞ்சில்
வேரருணச் சாற்றிலரைத் துண். (சு)

## அலரிவேர் நல்லெண்ணெய்க்குமாற்று.

உண்ணலரி யெள்ளெண்ணெ யூற்றியரைத் துண்டோர்க்கு
வண்ணகடு வின்குடிநீர் வாட்டுமே—நண்ணும்
முடிமேன் முடிக்கிழங்கை மூட்டுவெந் நீரில்
துடியாந் துருசுமுண்ணச் சொல். (எ)

## சுண்ணாம்புக்கும்வாளத்துக்குமாற்று.

சொல்லுவாய் சுண்ணத்தைக் கொண்டோர்க்குத் தூயதாம்
நல்லமஞ்ச ளாமேதி நன்மோரோ—வெல்லரிய
வாளந் தனக்காம் வசம்பி னடலையுமாம்
நீள்புளிக்கோ தின்னீறு நேர். (அ)

## மருதோன்றிக்கும், நுங்கிற்குமாற்று.

நேரா மருதோன்றி நீள்திலத்தி னெண்ணையுடன்
நேரவரைத் துண்டக்கா னீகேளு—வார்குழலாய்
தான்றிக்காய் நற்குடிநீர் தானுகுநுங்கினுக்குப்
போன்றுபெருங் காயம் புகல். (கூ)

## எருக்கம்பாலுக்குமாற்று.

புகலெருக்கம் பாலுக்குப் பொற்புடைய வெள்ளும்
தகவுடைய சர்க்கரையுந் தானும்—மிகுபருத்தி
வானிலையிற் காடிதனை வார்த்தரைத்துக் கொள்ளப்போம்
சீர்கிசியே ரண்டநெய்யாஞ் செப்பு. (கய)

## அபினிக்குமாற்று.

செப்புவாய் நல்லபினி தின்றோர்க்கு நெய்யாகும்
ஒப்பரிய வீருள்ளி யோட்டுமே—இப்புவியில்
சம்பிர நற்கனியின் சாறுகுஞ் சுக்குமாம்
நம்பவுரைத் தோமிதனை நாம். (கக)

## நாபிக்குமாற்று.

நாபிதின் றோருக்கு நற்சா ணிவேரை
மேவியே யான்பாலெனய் விட்டரைத்துண்—ஆவினெய்யிற்
பன்றிவிர்ஷ்டைகொண்டரைத்துண்பன்னுகடுக்காய்க்குடிநீர்
என்றுமதை யோட்டு மியம்பு. (கஉ)

இயம்புபுத்ர சோகிவித்தை யேற்ற சுரைநெய்யில்
நயம்பெறநீ யுண்டிடவே நாட்டு—வயம்பெருது [ப்
வெண்காரந்தன்னை முன்னெய் விட்டரைத்துண்ணான்மிளகை
பண்மொழியா யுண்டிடநீ பார். (கங)

பார்முள்ளிக் காயளவு பைம்மீன் றசையரைத்துச்
சேர்சுரபி வெண்ணெயிட்டுத் தின்னப்போம்—வார்குழலாய்
ஆனமயிற் றுத்தத்தை யங்கனைப்பால் விட்டரைத்துத்
தானருந்தில் தீருமென்றே சாற்று. (கச)

## நெல்வேர்சர்க்கரைக்கு மாற்று.

சாற்றுவாய் நெல்வேருஞ் சர்க்கரையுங் கொண்டோர்க்கு
மாற்றெருக்க நல்லிலைச்சா றுமானே—ஆற்றவவ்
வேருடனெள் ளெண்ணெய்க்கு வி று சுரையிலையாம்
பேரெனுமிச் சம்வேரைப் பேசு.

பேசிடுவாய் நெல்வேர்க்குப் பேய்ப்பீர்க்கின் வேரை
ஆசிலா நீர்விட்டே யட்டுண்பாய்—வீசுகின்ற
நன்னுவிலா மிச்சம்வேர் நற்குடிநீர் தன்னையே
உண்ணப்போ மென்றே யுரை. (கரு)

## தில்லைப்பாலுக்கு மாற்று.

உரைத்திடுவாய் தில்லைப்பா லூறுசெயின் மாதே
நரைக்கோவைச் சாற்றையுண்ண நன்றாம்—விரைத்தவிளக்
கெண்ணெயுமாங் காரெள்ளமை யின்கோ மயமாகும்
உண்ணெருமை மோரு முகந்து. (கஎ)

## வேர்க்கடலைக்கும், தேங்காய்க்கு மாற்று.

உகந்துநல் வேர்க்கடலை யுண்டோர்க்குச் சொல்வோம்
செகம்புகழுஞ் சீர்கன்னற் கட்டி—சுகம்பெறவே
தின்னப்போந் தேங்காயைத் தின்றோர்க்கு மீதேயாம்
பண்ணுவாய் பச்சரிசி யாம். (கஅ)

### நெய்தேனுக்கு மாற்று.

ஆவின்னெய் நற்றே னளவு சரியாக
மேவியதை யுண்டால் விளம்பக்கேள்—தாவில்
இருந்தையை நீர்விட் டிளக வரைத்தே
அருந்தப்போ மென்றே யறை. (௧௯)

### கோழிமுட்டைக்கும், வாழைப்பழத்துக்கு மாற்று.

அறைந்திடுவாய் வாரணத்தி னண்டத்தின் வேகம்
சிறந்திடுமுள் ளங்கிழ லத்தாற்—பறந்துவிடும்
வாழைக் கனியருந்தின் மாதே புகையிலையின்
கோழைக் குடிநீரைக் கூறு. (௨௦)

### நல்லெண்ணெய்சோற்றுக்கும், வெற்றிலைச்சாறு நல்லெண்ணெய்க்கு மாற்று.

கூறுவா யெள்ளெண்ணெய் கூட்டியரைத்தே சோற்றை
விறுடனுண் டாற்காடி வேகமதை—ஊறுசெயும்
வெற்றிலைச்சாறெள்ளெண்ணெய்மேவியுண்டோர் தங்களுக்கு
முற்றினதேங் காய்ப்பால் மொழி. (௨௧)

### கடலை, துவரை, மொச்சைக்கும்; நெய்க்கு மாற்று.

மொழிகடலை பாடகனன் மொச்சைமுன் றிற்கும்
வழுவறுசெம் மண்ணைநீர் வார்த்துப்—பழுதறவே
நன்றாக் கரைத்தருந்த நாடாது நெய்தனக்கு
நன்றாவான் பாலினையே நாட்டு. (௨௨)

### உழுந்துக்கு மாற்று.

நாட்டுவாய் மாடத்தை நன்றாகத் தின்றோர்க்குக்
கூட்டுவாய் கொள்ளுங்காய் வேளையின்வேர்—வாட்டமற
நன்மிளகு சீரகந்தே னுங்குங் கலந்துநன்றாக்
கொன்விழியாய் காய்ச்சிக் கொடு. (௨௩)

### பலாப்பழத்துக்கும், பாலாடைக்குமாற்று.

கொடுப்பாய் வருக்கைக் கனியருந்திற் கோற்றேன்
தடிப்பார் நறுநெய்யுந் தானும்—அடுக்கான
பாலாடை தின்னின் பகர்புளித்த மோரதனை
வேலாம் விழியாய் விடு. (௨௪)

### கோதுமைக்கும், நல்லெண்ணெய்க்கு மாற்று.

விட்டிடுவாய் கோதுமைக்கு வெய்ய மிளகாய்யாம்
மட்டிலான் பானெய்யு மாகுமே—திட்டமுடன்
எள்ளெண்ணெ யுண்டா லெழிலூசற் பட்டைதனைக்
கொள்ளப்போ மென்றே குறி. (உரு)

### கஞ்சாவுக்கு மாற்று.

குறித்திடுவாய் கோரக்கர் மூலிக்குச் சுக்கின்
வெறித்திடுநீ ருண்டால் விலகும்—நறைக்குழலாய்
சம்பிரச் சாறுந் தனிக்கதலிப் பட்டையினீர்
உம்பரமு தொக்குமதை யுண். (உசா)

### புகையிலைக்கு மாற்று.

உண்பாய் புகையிலையை யுட்கொள்ளி னல்லகத்திப்
பண்பான கீரைதின்னப் பாறுமே—நண்பாக்
குறிஞ்சாவின் கீரையுள்ளி கூறுநற் சீரம்
உரப்பெறவட் டுக்குடிநீ ரோட்டு. (உஎ)

### ஊறுங்கிழங்குக்கும், நாகக்கோட்டைக்கு மாற்று.

ஓட்டுமூ றுங்கிழங்கை யுண்டோர்க்கு வெள்ளையென
நாட்டுசங் கம்பழத்தின் சாற்றைநீ—மாட்டிடுவாய்
நாகக்கொட் டைக்குநீ நன்னீரிற் கொள்ளரைத்துத்
தோகையே கொள்ளத் துணி. (உஅ)

### கர்ப்பூரத்துக்கு மாற்று.

துணித்திடுகர்ப் பூரத்தைச் சோர்விற்கொண் டோர்க்குப்
பணித்திடுவாய் சம்பிரச் சாற்றில்—கணித்தபலம்
நற்காசிக் கட்டிதனை நன்று யரைத்தெடுத்து
அற்கவான் மோரிலுண்பா யன்று. (உகூ)

### சிவனார்க்கிழங்குக்கு மாற்று.

அன்று சிவனார்க் கிழங்கை யருந்திவிடின்
நன்றாய்ச்சுக் கின்குடிநீர் நாட்டுவாய்—ஒன்றுசுவை
வெள்ளரியின் வித்ததனை வெந்நீரி லேயரைத்துண்
ஒள்ளியநா வற்கொழுந்து முண். (௩0)

### இலவின் பிசினுக்கும், சதுரக்கள்ளிப்பாலுக்கு மாற்று.

உண்டக்கா னல்லிலவி னொண்பிசினை வெல்வதற்குத்
தண்டாச்சிவன்வேம்பைத்தானரைத்துண்—ஒண்டொடியே
கொள்ளப்போங் கள்ளியின்பால் கொண்டாலா வாரையிலை
மெள்ளவரைத் துண்ண விரும்பு. (௧௧)

### குன்றிமணிப் பருப்புக்கு மாற்று.

விருப்பான குன்றிவித்தை மேவியரைத் துண்டால்
பொரிக்காரந் தன்னைப் பொரித்து—விரைக்குழலாய்
வெந்நீரி லிட்டுண் விடத்தேரை வேரதனை
வெந்நீரி லிட்டுண் விரைந்து. (௧௨)

### மகிழம்பிஞ்சுக்கும், சோற்றிற்கு மாற்று.

விரைமகிழம் பிஞ்சுவித்தை வெய்யசுண்ணாந் நீட்டி
வரையினுத் தாமணிவேர் மாதே—அரைகொடுத்துக்
சொள்ளப்போ மேயமலை கொண்டோர்க்குச் சிரகமாம்
கொள்ளுக்காய் வேளைவேர் கொள். (௧௩)

### சோற்றிற்கும், கொடிக்கள்ளிப்பாலுக்கு மாற்று.

கொள்வாய் புளிந்தயிருங் கூறயலைக் காங்கடுகும்
நள்ளாக் கொடிக்கள்ளி நாட்டுபால்—உள்ளாயின்
கோவைச்சா றுகுமே கோமளத்தின் கோமயமாம்
மாவைகு நாமமண்ணுறு மாம். (௧௪)

### கழுதைவண்டுக்கு மாற்று.

ஆமே கழுதைவண்டிற் கம்புயத்தின் மூலத்தைத்
தேமேவு மாவின்பால் சேர்த்தரைத்துண்—போமே
அவரை யிலையை யரைத்துண்பாய் பாலில்
துவலரிய சிரகமுந் தான். (௧௫)

தான்கொடுப்பாய் வெண்சங்கின் தள்ளாவேர் தன்னைநீ
ஆன்பாலி லாட்டி யருந்திடவே—வானகத்தி
நற்சாறு மீவாய்நீ நல்லகரு வேலந்தோல்
விற்சாறு மீய விளம்பு. (௧௬)

விளம்பா யறைக்கீரை வேரையான் பாலில்
குழம்பா வரைத்துக் குடிக்க—வளப்பருத்தி
நீளிலேச்சா றுண்ணலா னேரவுரி வேராமே
ஆள்நா யுருவியுண்பா யாங்கு. (கஎ)

கோடல்கிழங்குக்கும், மிளகாய்க்குமாற்று.

ஆங்கோட லின்கிழங்கை யாற்றவுணி னீலியின்வேர்
பாங்காவெந் நீரிற் பருகுவாய்—தேங்காமல்
கார மிகுந்த கடிமிளகாய் தின்றோர்க்குச்
சீர்கொத்து மல்லிநெய்யுஞ் சேர். (கஅ)

பாதரசத்திற்கு மாற்று.

சேரிரதங் கொண்டோர்க்குச் செப்புவாய் வெண்சங்கின்
சாறுகும் காரவல்லிச் சாறுகும்—சீர்நீலி
நன்மைவேர் வெந்நீரில் நல்லசுண்டைக் காயளவு
மூந்நா ளருந்தல் முறை. (கசு)

சவ்வீரத்திற்கு மாற்று.

முறையாகச் சவ்வீர மொய்குழலாய் கொண்டால்
சிறுநெருஞ்சிற் சாறுண்ணத் தீரும்—அறையக்கேள்
நீலிவே ராகுமே நெய்ச்சிட்டிச் சாறுமே
பாலிதென்னங் கள்ளும் பகர். (உ0)

பூரத்துக்கு மாற்று.

பகருவாய் பூரத்தைப் பாங்குடன்றின் றோர்க்கு
இகலரிய குல்லையின்சா றீயத்—தகவுடைய
எரண்ட நெய்யா மெழிலவுரி வேராகும்
சீர்கொண்ட பாகலிலை தேர். (உக)

தாளகத்துக்கு மாற்று.

தேருவாய் தாளகத்தைத் தின்றோர்க்கு நீலியதன்
வேருடனே யாவிரம்பூ வெட்டிவேர்—சீரகமும்
மாதுளைவித் தோடுதென்னம் வன்குரும்பை காசினிவேர்
திதகல நற்குடிநீர் செய். (உஉ)

### கந்தகத்துக்கு மாற்று.

செய்யகந்தி தின்றோர்க்குச் செப்புவா யாவிரம்வேர்
தய்வேவளை வேர்நீலி தன்மூலம்—துய்யசுக்கு
நல்ல பருத்தியிலே நாகேசு ரஞ்சமனு
மல்லகுடி நீரட்டு வார். (௪௩)

வார்ப்பா யிளநீரில் வண்டா மரைவிதையை
நேர்ப்பா யரைத்துவடி நீருண்பாய்—கார்ப்பான
நன்மிளகு நீலியின்வேர் நற்சீ ரகஞ்சமனு
மன்னீரிற் காய்ச்சியதை மாட்டு. (௪௪)

### மிருதாரசிங்கிக்கு மாற்று.

நாட்டுமிரு தாரசிங்கி மாதேயுண் டோருக்குக்
கூட்டுகுடி ஞெருப்புன்கின் கோத்தோலே—வாட்டமற
நன்னீரி லேயரைத்து நன்று வடித்துண்ணச்
சொன்னீ யவுரியின்வேர்த் தாள். (௪௫)

### மயில்துத்தத்துக்கு மாற்று.

நாளா மயிற்றுத்தஞ் சோர்வுடனுண் டோர்கட்குத்
தாளான சம்பிரச் சாறுடனே—கேளாய்நீ
இஞ்சிநீர் தேனு மிருப்பஞ்ச தாரையுடன்
கொஞ்சுமொழி யுண்ணக் கொடு. (௪௬)

### உப்புக்கு மாற்று.

கொடுப்பாய்நீ யுப்பிற்குக் குப்பைமே னிச்சா
றடுக்கான தாழைவிழு தாநீர்—குடித்திடுவாய்
சிற்றம்மான் பச்சரிசி சீரகந் தின்னலாம்
பொற்றொடியே சொல்வாய் புரிந்து. (௪௭)

### செம்பின் களிம்புக்கு மாற்று.

புரிந்திடுவாய் தாம்பிரத்தின் பொல்லாக் களிம்பை
அருந்திவிடி னுமலகச் சாறுண்—பொருந்தவே
சம்பிர நற்பலத்தின் சாறுகு மேதியதன்
இம்புளித்த மோரென் றிசை. (௪௮)

### இருவங்கத்துக்கு மாற்று.

இசைப்பா யிருவங்கங் கொண்டோர்க்கு நல்ல
இசைப்பாங் கரும்பூ விலையைத்—தசைப்பார்
கறுங்கோழி மாமிசமாங் காட்டுப் புளியரணை
நறுவேரா மென்றேநீ நாட்டு. (சகூ)

### கொடுவேலிக்கு மாற்று.

நாட்டாய் கொடுவேலி நல்வேர் தனக்குநீ
கூட்டாய் நறுநெய்யைக் கூசாமல்—வாட்டமிலா
மாட மரைத்ததனை மாதே திலநெய்யில்
போடுவடை யாக்கிப் புசி. (ருഠ)

### சேராங்கொட்டைக்கு மாற்று.

புசிப்பாய்நீ சேங்கொட்டை போற்றியுண் டோர்க்கு
இசைப்பா மெகினத் திலையை—விசைப்பாக
நன்று விடித்தாற்றி னன்னீரி லேகலந்து
குன்றுமற் பாண்டத்திற் கூட்டு. (ருக)

கூட்டி யிளநீரின் கொண்டமேற் றேல்போக்கி
வாட்டமற முன்சொன்ன மாநீரில்—போட்டட்டு
நற்பருப்பை முன்றின்று நன்னீர்பின் னுண்டக்கால்
பொற்கொடியே போமென்றே யோர். (ருஉ)

### அரத்தபாளத்துக்கும், இடுமருந்துக்குமாற்று.

ஓரரத்த பாளத்தை யுண்டார்க்கு மானேகேள்
பேரரத்தை நற்சுடிநீர் பேசுவாய்—சீரா
இடுமருந்தைக் கொண்டோர்க் கியன்றகருஞ் செம்பை
இடுவிலைச்சாற் றைமாவி லீ. (ருஙு)

ஈவா யிடுமருந்திற் கேற்றபெரும் பூசுணிக்காய்
தாவாய்க் கடலையிட்டுத் தானட்டே—ஓவாமல்
ஐயவிகுய் நீக்கி யருந்துவாய் நீலியின்வேர்
மொய்குழலா யுண்ணமொழி. (ருச)

மொழிந்திடுவாய் செங்காஞ்சி மூதிலையின் சாற்றைப்
பிழிந்தெடுத்து நெல்லவலிற் பெய்தே—செழுங்குழலாய்
தின்னப்போம் பச்சைச் செனிகையைத்தின் றூறும்போ
நன்னயமாய்ச் சொல்வாய் நயந்து. (ருரு)

சகலநஞ்சுக்கு மாற்று.

நயப்பான வெந்தயமு நல்ல கறியும்
வியப்பா யரைத்தேவெந் நீரில்—கயற்கண்ணாய்
வெண்ணெயுடன் கூட்டி விழுங்கப்போ மெவ்விஷமும்
உண்ணுவாய் சீனா மூவந்து. (௩௬)

துப்பாம் பொரிகாரந் துய்க்கிற்போ நீலியின்வேர்
தப்பாம னீக்குமென்றே சாற்றுவாய்—ஒப்பாய்முன்
சொன்னநஞ் சத்தனைக்குஞ் சொல்லுவாய் நீலியொன்றே
தின்னப்போ மென்றே தெளி. (௩௭)

மாடு,செப்பு நெருஞ்சில் தின்றால் மாற்று.

தெளிவாய்நீ செப்பு நெருஞ்சிறனைத் தின்ற
ஒளிசேர் பசுவினுக்கோ வோமம்—அளிமிளகு
நல்லகத்தித் தோலுடனே நன்று யரைத்திட்டால்
தொல்லை விடந்தொலையுஞ் சொல். (௩௮)

ஷை அலரிப்பழப்புக்கு மாற்று.

சொல்லலரி யின்பழுப்பைத் துய்த்த பசுவினுக்கு
வெல்லகத்திப் பட்டை விலக்குமே—அல்லல்செயும்
சோளப் பயிர்தின்னின் துய்யவுத் தாமணிவேர்த்
தூள்பூண்டு கொண்டுதுண்டத் தூது. (௩௯)

ஷை மிளகாய்ப்பூண்டுக்கு மாற்று.

ஊதுமிள காய்ப்பூண்டை யுண்ட பசுவினுக்குத்
தீதில் மிளகுமஞ்சள் சிரோமம்—ஓதகத்திப்
பட்டை தனையிடித்துப் பாங்காய்க் கொடுத்துவிடின்
விட்டோடு மென்றே விளம்பு. (௪௰)

விஷப்பிரதி விஷத்திரட்டு முற்றிற்று.

உ

சிவமயம்.

சுந்தரானந்தர்செய்த

# ஆயுள்வேதப் பொதுலக்ஷணம்.

---

## பாயிரம்.

### கணபதிதுதி.

ஐந்துகரத்தனை யானைமுகத்தனை
இந்தினிளம்பிறை போலுமெயிற்றனை
நந்திமகன்றனை ஞானக்கொழுந்தனைப்
புந்தியில்வைத்தடி போற்றுகின்றோமே. (௧)

### சுப்பிரமணியர் துதி.

தந்திக்கிளையனைத் தாமரைத்தாளனைப்
பந்தமறுத்திடு பன்னிருகையனைக்
கந்தக்குறந்தி கணவனை வேலனை
எந்தையைநாளு மிறைஞ்சுதுமியாமே. (௨.)

### பரசிவ வணக்கம்.

ஐந்துமுகத்தனை யம்பிகைபாகனை
அந்திநிறத்தனை யாரணமெய்யனைச்
சந்திரமௌலியைத் தாணுவைச்சம்புவைச்
சந்ததம்போற்றியே சாருதுமியாமே. (௩.)

### நூற்பெயர் முதலியன கூறல்.

ஆயுள்வேதமே வேதமா மஃதெவ்வா றென்னின்
ஆயவிடடை வோர்கண்மா னிடர்களே யல்லால்
ஏயவேறிலே யவருடல் வீந்திடா தியற்றத்
தாயகன்மருந் துரைத்தலா லாமெனச் சொல்லாய். (௪)

மூன்றுகண்ணுளோ ரிருவரா மியாரெனின் மூன்று
ஆன்றலோகமீன் றளிப்பவ ளாகிய வரனும்
தோன்றுமப்பொருட் டுயரினைப் போக்கிடு வோனும்
ஏன்ற மாமருத் துவனுமே யெனவியம் புவரே. (௫)

மருத்துவத்தொழி லியற்றுவோர் வரப்பினு லவற்றின்
கூறுத்தறிந்துபின் மருந்தியற் றிடல்கட னென்பார்
திருத்தவப்பெரு நூல்களின் றிறந்தெரிந் திடுதல்
வருத்தமாதலாற் பொதுவகை வகுப்பதிந் நூலாம். (௬)

அளவைதெய்வத மாம்பொருளல்பொருள் காலம்
ளமதாகிய பொருள்களின்பலன்செயல் வகைகள்
விளையுநோய்வகை தீவகை புடவகை விளங்க
அளவதாயுரைத் திடும்பொதுநூலிதென் றறைவார். (௭)

பண்டிதரியல்பு கூறல்.

பண்டிதன்பரி காரிநல் வைத்திய னெனப்பேர்
கொண்டவன்பர ணுகுமப்பெயரினைக் கொண்டோர்
மண்டலத்தினி லாயுள்வே தந்தெரி மாந்தர்
எண்டிசைபுக ழெழுபிறப் பளவுமெண் கணராம். (௮)

வேறு.

தெய்வந்தன்னை வழிபடுசிந்தையும்
பொய்யிலாமொழி யுநற்புலமையும்
ஐயமற்ற வறிவும்பெருமையும்
வெய்யகோபம் வெறுப்புமிலாமையும். (௯)

உயிர்கண்மீது கிருபையு மோகையும்
செயிரகற்றிடு சிந்தையுமீகையும்
அயர்விலாமையு மன்புநிறைந்துளன்
உயர்வதாகிய வொப்பின்மருத்துவன். (௧௦)

வேறு.

நாடியாதியெண் குறிகளை நன்குற நோக்கல்
பாடதாகுமந் நோய்களின் பேதத்தைப் பார்த்தல்
விடுநோயெனின் தகுமருந் தெண்ணியே யியற்றல்
கூடிலாமருந் தின்விலை யீந்தபின் னீதல். (௧௧)

பொருளிலார்களைத் தீப்பசி பணிப்பினைப் போக்க
அருளிலாமலே பொருளுடையோர்கள்பா லீட்டித்
தெருளுநன்மருந் துணுகில்தீதற வளித்தல்
மருளகற்றிடல் மருத்துவர் கடனென்பர் மன்னே. (௧௨)

இருவர்வந்தழைத் திடினவரிற்புகா திருத்தல்
கருதுநற்சகு னத்தினைக்கண்டுசென் றிடுதல்
மருவுநோயினர் மஞ்சமாதியதொடா திருத்தல்
அருகுகீட்டிசை முகமுற வாசனத் திருத்தல். (௧௩)

கருமியேபிணி யாளனுமவன் கரம்பற்றின்
வருவதாந்தொடக் கென்றனர் மாற்றிடு வகைதான்
பெருகுநீரினின் மும்முறை பெட்புற மூழ்கல்
தருகைதாள்கழல் தரையின்மூ விரல்களைத் தட்டல். (௧௪)

மந்திரத்தினீர் தெளித்திடல் வத்திரங் களைதல்
அந்தமில்லதோ ராக்கினே யக்குளி யாடல்
சுந்தரம்பெறு மஞ்சணீர் தெளித்திட றேமில்
இந்நால்வகை யியற்றுதல் கடனென வியம்பாய். (௧௫)

ஆயதாய்தந்தை தருதெய்வ மனைத்துநீ யென்றே
நேயமெய்ம்மையா மன்பொடு நிறைவுறு மனத்தின்
ஏயவெம்மருந் தாயினு மீந்ததைச் சுருதி
நாயகன்றரு வமுதமீ தாமென நயந்தே. (௧௬)

உண்டிடத்தியஞ் சொற்றிடு முறைப்படி யுஞற்றி
கொண்ட நோய்த்திறம் படிறின்றிக் குறைவறக் கூறிக்
கண்டபோதெலா மொன்றதாக் கருதுவோர் தமக்கு
மண்டலம்புகழ் மருத்துவர் பண்டிதம் வகுக்க. (௧௭)

தந்தைதாய்முதற் றம்மனோர்க் குற்றநோய் போலச்
சிந்தைகொண்டுநாற் றிறத்தொடும் வைத்தியஞ் செய்க
முந்துநூலுணர் மூதறி வோரொடு முயங்கி
நந்தலின்றியே நன்மருந் தாகிய நயத்தல். (௧௮)

### யாத்திரைக் கல் முதலிய இயல்பு கூறல்.

பகருமாத்திரைக் கல்லதோ மாயனும் பண்பார்
நிகரிலிந்திர னிறைவனுங் குடிநனீ ரமுதாம்
தகவிலாதவை சாற்றும்வை குந்தமாந் தாழ்வில்
இகலிலாவிரன் மூன்றுமும்மூர்த்தியா மென்பார். (௧௯)

அரைகன்மாயவன் றுயில்கொளு மமுதவா ரிதியாம்
உரமதாகிய குழவிமந் தரவரை யுயர்நீர்
வரைகொளோடதி மதிப்பவ ரதிதியின் மைந்தர்
திரையிற்றோன்றிய வமுதமே மருந்தெனச் செப்பாய். (௨௰)

### கலுவத்தின் தணங் கூறல்.

கருமைசெம்மையதாகிய கற்களைக்கொண்டு
உரிமையாய்ச்செயுங்கலுவங்க ளுத்தமமாகும்
பெருமையாம்வெள்ளைக்கல்லினு லியற்றுகல்வமதோ
அருமையாமருந்தின்பல னத்தனையிலதே. (உக)

### கலுவத்சுறண்டியின் தணங்கூறல்.

இருப்பினாற்கலுவஞ்சுறண் டியபொருளியற்றின்
தருப்பினான்மருந்தின்குணஞ் சுருக்கிடுமுருக்கு
ளிருப்பதாகியவெள்ளியு முத்தமம் விருட்சம்
மருப்பினாற்புரிகருவியோ மத்திமகுணமாம். (உஉ)

### மண்டலநாள் வேருகடி அளவை கூறல்.

மண்டலம்மது மண்மக ளோரையில் வதியும்
நன்றதாகுநாள் நாற்பதின் மேலைந்தாய் நவில்வர்
கொண்டிடும்வெரு கடியதுமூவிரல் கொள்ளும்
பண்டமென்பதே யாமெனப் பகர்ந்தன ரன்றே. (உ௩)

### மருந்துகோள்பாத்திரங்கூறல்.

வெள்ளிப்பாத்திர மருந்துணலாகுமே மேலா
வின்னுசெம்பொனே மிகுபயனீயுமே மண்ணால்
கொள்ளுபாத்திர முத்தமங்கூறிய பொருட்கே
எள்ளும்வெண்கல மத்திமமாமென விசைத்தார். (உ௪)

### மாந்திரசிசிரீழ்கூறல்.

வெண்பொன் செம்பொனு லியற்றிய சிமிழதுமேலாம்
பண்பில் செம்பிலுஞ் சிறளாம் பரணியின்மருந்து
உண்பதன்றுமெதங்கின்சுரை யுத்தமமாய்வேய்
நண்பதாவிலங் கின்மருப் பிவைநலஞ்சிறிதே. (உ௫)

### பேதிகொள்ளுங்காலமு மருந்துங்கூறல்.

கோடைகாலத்தின்விரேசன மெண்ணெய்நற்குடிநீர்
வாடைகாலத்திலவைகொளின் தேகவாதையதாம்
நாடுவாயுப்பு வாளமா தியபொருணயத்த
ஈடிலாமருந் தெப்பொழுதும்பெறவியம்பே. (உ௬)

### பொருள்களின் நஞ்சுள விபரங்கூறல்.

அகணிநஞ்சுளபொருள்கடு தான்றியதாகும்
புறணிநஞ்சுள பொருள்சண்டி யிஞ்சிவெள்ளுள்ளி
தரணியுள்ளனவாகிய பொருள்களுக்கெல்லாம்
விரணஞ்செய்விட நீக்கிடு சுத்தியாம்விளம்பே. (உஎ)

### மூலமுதலிய கூறல்.

மூலங்கூறிடாப்பொருள்கள்ச மூலமாம்வகுத்துச்
சாலும்பாகமுதறைந்திடாப் பொருள்சமபாகம்
காலங்கூறிடாமருந்துகொள் காலமுநாளாம்
ஏலப்பத்தியம் புகல்கிலா விடினிச்சாபத்யம். (உஅ)

### நாழிமுதலிய அளவைகூறல்.

ஆயுள்வேதியரறைந்தனர் நாழியினளவை
ஏயகாற்சதத்தொடியென விதெொடிக்களவோ
தாயகுன்றிமுந்நூற்றறு பாவெனத்தொகுத்தார்
ஆயநாழியெண்ணுவதே குருணியினளவே. (உக)

### மருந்துசெய்காலங் கூறல்.

கானத்துற்றநான் கோடதிபலன்கொளுங்காலம்
தேனுகுத்திடுதைமதி யாதிமாசியதாம்
ஆனவம்மதிப்பாதியி னளவுமேயநாள்
வானநன்மருந்திவைகள் மருந்தியற்றிடுவாய். (௩0)

### மருந்தின்வயது கூறல்.

ஊளங்கூடியமாத்திரைக் காண்டதோன்றுகும்
நீளுமெண்ணெயின்வயதுபன் னிருமதிநிகழ்த்தல்
கேளுமேலெகியங்கிருதமீ ராண்டெனக்கிளக்க
ஆளுநற்றைலத்தினுக்காண்டு மூன்றறைவாய். (௩க)

நூறதாகுமே பற்பத்தின் வயததின் முக்கால்
விறுசெந்தூர மாகுமே பதங்கமோர்பத்தாம்
தேறுநன்றதா வுருக்குமாத் திரைசதமடங்கல்
சீறுகின்றநற் குழம்புமோ ரைந்தெனச்செப்பாய். (௩உ)

## மாத்திரைகளின் பலன்கூறல்.

அரைப்பு மாத்திரை காற்பலன் சுருக்கரைப்பலனும்
தருக்கி டும்புடமாத்திரை தான்முக்காற் பலனும்
உருக்கு மாத்திரை யுயர்புடமாத்திரைக் கொன்றும்
திருக்கறுத்திடுசிந்துரம் பற்பமொன்றரையாம். (௯௩

## தீயினளவும் பெயருங்கூறல்.

விளக்கையொத்திடு தீயது தீபமாமேவிக்
குளத்தினம்புயப் பூநிகர்தீகுளிர்கமலம்
தளத்தகன்னியின்பூநிகர் தீதளிர்கதலி
வளத்தகாட்டுறு தீயதே காடவன்னியதாம். (௯௪

## புடவகை கூறல்.

ஆயிரம்வறட்டிகூடி னையின்புடமதாகும்
நேயமோடைம்பான்சேரி னீளேனப்புடமாமென்பர்
ஆயவோராறுகூடி னறைவர்குக்குடமாமென்றே
தூயமூன்றுகின்மாதே சொல்லுவாய்காடையென்றே. (௯௫

## எருவினளவு முதலிய கூறல்.

எருவினதகலஞ்சாண்மே லங்குலமூன்றதாகும்
பருமனோர்விரலதாகும் பகருவாயீரமற்ற
சுரபியின்சாணமுன்னுஞ் சொன்மேதிச்சாணம்பின்னும்
விரவுசாணத்தாற்செய்த வியனெருக்கடையதாமே. (௯௬

வனத்திடுவறட்டியிட்ட மருந்தது சிறந்ததாகும்
கனத்தகாராட்டின்சாணங் கடுவேகமருந்திற்கீயும்
மனைப்படுவறட்டியாலே மங்குமேமருந்தின்வேகம்
நினைத்திடாயழுகற்சாண நீக்குவாய் மருந்தினுக்கே. (௯௭

## விறகின் குணமும் விதமுங்கூறல்.

### வெண்பா.

மெய்யாஞ் சுரம்போக்கு மேலாங் கஷாயமதை
எய்யாமற் காய்ச்ச வெரிவிறகு—ஐயாகேள்
சீரான செவ்விலந்தை சிற்றமுட்டி யாவாரை
நேரான வூஞ்சலென்பாய் நீ. (௯

வாதப் பிடிப்பதனைவாட்டுங் கஷாயமதைப்
போதப் புளிவேம்பு பூவரசு—மாதேகேள்
நல்லிலுப்பை யிவ்வைந்தி னூட்டு விறகிலொன்றில்
வல்லமையாக் காய்ச்சி வடி. (௩௯)

கூறும் விறகிலொன்றைக் கூட்டுவதே யல்லாமல்
வேறுவிற கைக்கலந்து மேவாதே—ஊறுசெயும்
தக்கவிற கைத்தெரிந்து தானெடுத்திங் கொவ்வொன்றே
எக்குடிநீர் கட்கு மிடு. (௪௦)

பட்ட விறகிற் பயனில்லைப் பன்னுண்முன்
வெட்டும் விறகு மிகுபயனில்—திட்டமுடன்
பச்சை விறகு பயன்போக்கு மும்மதிமுன்
எச்ச விறகை யிடு. (௪௧)

வயிர விறகால் வளருமே வெப்பம்
செயிரான பட்டைதின வாகும்—உயிரீயும்
சாலியுமி நேர்மைதருஞ் சாற்றுஞ் சருகோசொல்
பாலமொழி யேபயனு மில். (௪௨)

சுட்ட கரியாற் சுரக்குமே யெப்பயனும்
தட்டும் வறட்டியினாற் றன்பயனென்—இட்டமுறு
லேகியமெண் ணெய்கிருத நேர்த்தியா யோர்வருககம்
ஆகுவிற காணீ யடு. (௪௩)

## கஷாயத்தின் பிரிவு முதலியகூறல்.

அடைகஷா யத்தி னளவுநாளமூன்றதா மொருநாள
இடிகஷாயத்தி னளவிருவேளையா மியம்பின்
படியிலொவ்வொரு வேளையுமடுவதே பாகம்
அடுகையோர்படி யட்டமத்தொன்றதா வருக்கல். (௪௪)

எவ்வகைக்குடி நீர்கட்குமொட்டொன்று வருக்கல்
செவ்வையாமென்ப தீயிடுமுறைவன மூதற்றீ
எவ்வநீக்கிய கதலிதாமரைவிளக் கென்ப
நவ்விநோக்கிநீ ரருக்கலுமிம்முறை நான்கே. (௪௫)

## இச்சாபத்தியத்தில் நீக்கும் பொருள்கூறல்.

கடுகுநற்றிலத் தெண்ணெய்கூழ்ப் பாண்டங்கள் கடலை
வடுவதாகிய தெங்குமாவருக்கைகாற் காயம்
மடிவிலாதவெள் ளுள்ளிகொள்புகையிலை மதுபெண்
இடமுறுபாகமோ டகத்திநீக் கிட விச்சா பத்யம். (௪௬)

### ஷை ஆதம்போநன்.

பருவரால்கருங் குறவைதேள் மீனிவைப் பருகல்
உரியவுள்ளன்காட் டுப்புறு கபிஞ்சலங் கலைமான்
பெரியவெள்ளையின் றசைபசும்பாலெய்மோ ரிதலாம்
அரியசம்பிரப் பழத்தின்சாறருந்துத லாமே. (சஎ)

### மிகுகடும்பத்தியங்கூறல்.

கடுமைமிக்கிடு பத்தியமட்புதுக் கலத்தில்
அடுகைசெய்துண லுவரிநீர்புளிசிழு லவிர்கால்
படுகைமெய்பினி லாவகைபடுத்திட லுவர்மண்
தொடுகையாதிய நீக்குதலென்பலர் சொன்னார். (சஅ)

### கடும் பத்தியங்கூறல்.

கடுமையென்றிடு பத்தியமுவர்வறுத் துண்டல்
உடைவிலாமறு பத்தியநறுவர்வறுத் தருந்தல்
கொடுமைசெய்புளி தனைச்சுட்டுக்கூட்டிட லன்றிப்
படியில்கத்தரி சிக்குருப்பிஞ்சினைப் பருகல். (சகூ)

மருந்துதின்றிடின் பத்தியம்வகுத்திடா விடினும்
அருந்தவாகிடாப் பொருள்களையகற்றவே வேண்டும்
பொருந்திடாதுபெண் போகமோர்மருந்துக்கும் புவியில்
வருந்துவோருட லறிந்துபத்தியந்தனை வகுப்பாய். (ரு௦)

### பத்தியங்கொண்டோர் தூங்காக்காலங்கூறல்.

பத்தியங்கொண்டபேர்கள் பகற்றுயில்கொண்ட காலைச்
சித்திரபானுவெப்பஞ் செப்பிடுமருந்தின் வெப்பம்
பத்தியச்செயலின்வெப்பம்பகருநித்திரையின் வெப்பம்
இத்தனை வெப்பங்கூடி னியனுநோய்க்களவின் றென்னே. ()

### மாந்தர்செய்யும் செயலும் செய்யாச்செயலுங்கூறல்.

நாளோர்நான்கினி னற்றலைமூழ்குதல்
நாளோரெட்டினி னுண்மயிர்நீக்குதல்
நாளோரெட்டினி னங்கையைக்கூடுதல்
நாளோர்மூன்றினி னல்விழிமையிடல். (ருஉ)

நீரைச்சுண்டிடக் காய்ச்சிநெய்யட்டினால்
மோரைநீரிற் பெருக்கிமுயங்குதல்
கூரைமாசு கொளாமலுடுத்திடல்
நேருநோயினர் நீர்மலநீங்குதல். (௫௨)

இரவிலன்றிப் பகலுறங்காமையும்
விரவியுண்டபின் னீருணும்வேட்கையும்
பரவியுண்டுபப் பத்தடியேகலும்
உரமதாவிரு சாமமுறங்கலும். (௫௩)

கந்தமன்றியோர் கந்தமுணாமையும்
முந்துமாதர் தனமுயங்காமையும்
அந்தநாட்டயிரு மரம்பைக்கனி
பந்தமாகப் பருகலிலாமையும். (௫௪)

பகலின்மாதரைக் கூடுதலின்மையும்
இகலிநற்பசி யின்றியுணாமையும்
தகவில்வெண்ணெய் தனையருந்தாமையும்
மிகுமிளவெயின் மேனிபடாமையும். (௫௫)

இடங்கைகீழிட் டுறங்கன்முன்னாளினில்
அடுங்கறியையுண் ணாமைமுன்னாட்டயிர்
படுமுதிஃ தென்னப்பருகிடல்
கொடுநற்பேதி மதிநான்கிற்கொண்டிடல். (௫௬)

நாறுபூமொக ராமைநடுநிசி
விறுமுண்டி யறுந்தருணத்தினைத்
தேறிப்பெண்களைக் கூடுதலின்மையும்
கூறினெப்பொரு ளுண்டபின்னீருணல். (௫௭)

எண்ணெயிட்டுவெந் நீரினின்மூழ்கையும்
வண்ணவான்பால் மகிழ்ந்தினிதுண்டலும்
திண்ணமாமல நீரடக்காமையும்
பண்ணுபாக மழிபதநீக்கலும். (௫௮)

பாரில்வைகையில் பகருமணலினில்
சாரநித்திரை தான்புரியாமையும்
நேரதாமிந் நியதிபுரிந்தவர்
பேரைக்கூறப் பெரும்பிணிபாறுமே. (௬௰)

ஒன்றோர்போதினி லுண்டவன்யோகியாம்
நன்றதாயிரண் டுண்டவன்போகியாம்
துன்றுமூன்று பொழுதுண்டோன் ரோகியாம்
அன்றிமேலுண்டோ னும்பலரோகியே. (௬௧)

எண்ணெய்கொள்ளுநாள் முப்பதாமாண்டினு ளென்ப
வண்ணலேகியங் கொள்வதுமேலொரு பத்தாம்
திண்ணச்சிந்தூர மறுபதாமாண்டினுள் தின்கப்
பண்ணுபற்பநாலைந்தின்மேற்பருகனூ றுண்டே. (௬௨)

## உண்பொருள்களின் சீரணகாலங்கூறல்.

பாரினின்மாந்தருண் ணும் பண்டமென் றுரைப்ப வெல்லாம்
சீரணமாகுங்காலந் தெளியவேசெப்பக் கேள்நீ
காரரைரசமோரேழு கன்னலாங்கற்கஞ் செய்நீர்
விரணத்தண்ணீர்சாம மிளவெந்நீரிரண்டே சாமம். (௬௩

சாலவேகாய்ச்சியாறுஞ் சலம்பதமூன்றே முக்கால்
சிலநற்குடிநீர்மூன்று சீர்பழச்சாறோ ராறும்
எளுஞ்சோறிரண்டுசாம மியன்றபாலிருபான் கன்னல்
பாலைமோர்மொழியாய்தேனே பன்னிருகடிகை யாமே. (௬௪

வார்பெருந்தயிருஞ்சோறு மாள்கன்னல்பன்னொன்றாகும்
மோரிடுபதம்பன்மூன்று மொழிந்தபாலீரொன்பானும்
ஆருவச்சோறீரேழா மவிர்வெறுமமலையஃதே
பார்வெண்ணெய்ச்சோறோர்சாமம்பகர்ந்தமெல்லாஞ்சாம

உரையிலைக்கறிதண்டாதி யுண்டிடிலொன்றுஞ்சாமம்
விரைகளும்பழத்தின்சாறும் வெந்திடிலோர்சாமந்தான்
உருசியாறுளவவற்றை யொளிர்பச்சையாத்தின்றாலும்
கரையில்வெந்திடத்தின்றாலுங் கடிகையைந்ததன்மேலில்லை

காவிநேர்கண்ணாய்சொன்னோங் கழுகுநீர்காடிக்கைந்தாம்
மாவுண்டைபொங்கலப்ப மன்னியநெய்பாலான்மோர்
மேவியேகூட்டியுண்ணின் விளம்புவாயிருபான்கன்னல்
மாவடுவெருக்கைவாழை வளர்கன்னல்வகைக்குப்பத்தே. (௬

வர்த்திக்கும்வடித்தகஞ்சி வகைதனக்குரையோர்சாமம்
தித்திக்குந்தெங்குகன்னல் செழும்பலாவெல்லந்தின்னில்
உற்றிடுமிருபான்கன்ன லுயர்புழுக்கின்புழுக்கல்
சொற்றனமிரண்டுசாமஞ் சோர்வில்பச்சரிசிமூன்றே. (௬

சூரணந்தயிலம்லேகங் கிருதம்பன்னிரண்டாங்கன்னல்
சிரியபழங்களெல்லாஞ் சிரணஞ்சாமந்தன்னில்
கூரியநறிகளெல்லாங் கூறிமேலோர்சாமமென்றே
சேருசிந்தூரம்பற்பஞ் சீரணமரைச்சாமத்தில். (௬௯)

இளநீர்சர்க்கரைபானக்க மெழுநாழிகையிற்செரிக்கும்
வளமுறுதயிரின்மேலும் வார்த்துணுமோரின்மேலும்
தெளிவுறுதண்ணீருண்ணச் செரித்திடுங்கடிகையைந்தில்
தெளியநற்பொரிமாநீருஞ் செரிக்குமோர்சாமந்தன்னில். (௭0)

சுட்டவெந்நீருண்பார்க்குச் சொல்லுவாய்சாமமென்றே
மட்டிலாதட்டவெந்நீர் வருக்கிலோர்சாமமாகும்
அட்டமாய்க்காய்ச்சியாறு மவிர்தண்ணீரிருபான்கன்னல்
வட்டவேல்விழிபிணைளே மருவுபாயசமீர்சாமம். (௭௧)

தருசெடிகொடிபூண்டாதி சாற்றுபூதழைகொழுந்து
அரிவையேயுண்ணிற்சாம மதனிற்சீரணமாஞ்சொன்ன
திரவியவகைகட்கெல்லாந் திருமிகுவேதஞ்சொன்ன
குருபரனடியைப்போற்றுங் குறுமுனியுரைத்தவாறே. (௭௨)

பாண்டதணங் கூறல்.

ஓர்மருந்துசெய் பாண்டமோர் மருந்தினுக்கொருவல்
சீரதாகுமட் பாண்டமே சிறப்பெவற் றினுக்கும்
தேருநாய் தைலத்தினிற் கயத்திற்செய் பாத்ரம்
சேரு லோகத்தி லீயம்பூசியகலன் சிறிதாம். (௭௩)

முத்தருக் கூறல்.

உற்றவாண்மர முள்வைரம்முடைமரமாம்
சுற்றிநல்வயி ரம்முளமரம்பெண்ணுச்சொல்ப
பற்றிடும்வயி ரம்மிலா மரத்தினைப்பகரில்
நற்றவம்பெருவலியென நாட்டுவர்பெரியோர். (௭௪)

முந்நீர் கூறல்.

ஆற்றுநீர்பல தருக்கள்மண் படிவனஃததிகம்
ஊற்றுநீர்மண்ணின்குணமொன்றே யாதலினரையாம்
தோற்றுநன்மழைநீரதே நீரதாமென்ப
சாற்றுவார்குணமிம்முறை யாமெனத்தானே. (௭௫)

### மும்மலர் கூறல்.

பூவதேபிஞ்சதாகிய மலர்கள்பூப்பிஞ்சாம்
பூவினொடுபிஞ்சுளமலர் பிஞ்சுப்பூவாகும்
பூவதேயன்றிப்பிஞ்சிலா மலர்வெறும்பூவாம்
பூவினின்குணமூவகை யாமெனப்புகல்வர். (எசு)

### மும்மூலங் கூறல்.

வேரதேகிழங் கன்றிவே ரல்லதுகிழங்காம்
வேரகத்திலும்வெளிப்புறங் கிழங்குவேர்க்கிழங்காம்
வேரதேயன்றிவேறில பொருள்கள்வேரென்ப
வேரின்பேதமூன்றுமென விளம்பினர்புலவர். (எஎ)

### கொடிகளின்வகைகூறல்.

கொடிகளின்வகையிரண்டெனக் கூறுவரவைதாம்
படியில்பற்றுகையில்லது சுற்றெனுங்கொடியாம்
ஓடியில்பற்றுகையுள்ளது பற்றெனுங்கொடியாம்
படியிலோடதிகொடிசெடி பூண்டுபன்மரமே: (எஅ)

### முந்நோய் கூறல்.

சாத்தியம்மெனுநோயது வுடன்றணிவெய்தும்
சாத்தியம்மிலாநோயது வுடனுயிர்தணத்தும்
சாற்றும்யாப்பியநோயது சாருநாளளவும்
ஆற்றத்துன்பமேதருவதல் லாதகலாதே. (எகூ)

### உறுப்பைப்பற்று நோய்கூறல்.

தோலைப்பற்றியேசார்ந்திடு நோயதேயென்றும்
ஏனுநற்றசைதனைப்பற்றி யியலுநோய் நரம்பின்
காலைப்பற்றியேபொருந்துநோய் மூளைபற்றியநோய்
வாலதாகியவெலும்பைப்பற் றியதெனவகுப்பார். (அ0)

மேலதாகியவங்கத்தைப் பற்றியேவிளங்கும்
ஏலதாமதோவங்கத்தைப் பற்றியேயியலும்
தூலமாமிருவங்கத்தைப் பற்றியேதுன்றும்
ஆலநேருநோய்மூவகை யாமெனவறைவர். (அக)

### பஞ்சாமலகங்கூறல்.

ஆமலகத்தி லைக்துபேதங்களாமறைவோம்
தோமில்நெல்லிமா துளைவிளாசொற்பெறுமிலந்தை
நேமகல்லெலுமிச்சையோ டைவ்வகைநெறியாய்
ஆமதாம்பித்தமகலுமேயிவற்றின்பேரறையின். (அஉ)

### திரிகடுகு, திரிபலை, பஞ்சமூலங் கூறல்.

முக்கடுகெனிசுண்டி கறியெனமொழியலாமே
தக்கமுப்பலைகற்றூன்றி சார்கடுநெல்லியென்ப
தொக்கவைம்மூலஞ்சுக்கு கொடுவேலியரத்தைசெவ்யம்
பக்குவமானகண்டு பறங்கியாம் பஞ்சமூலம். (அ௩)

### நோயில்லாதவர்களுக்கு நாடிக்குணங்கூறல்.

வாதநாடியும் வன்பித்தநாடியும்
சேதமுற்ற சிலேத்துமநாடியும்
ஓதிடுமொன் றிரண்டுகாலோடிடில்
சேதஞ்செய்யும் பிணியறுதேகமே. (அ௪)

### நாடிபார்க்குங் காலங்கூறல்.

சித்திரைவைகாசிக்குச் செங்கதிருதயமாகும்
உத்தமவாணியாடி யாரலைப்பசிமதிக்கு
மத்தியானத்திற்பார்க்க மார்கழிமகரமாசி
அத்தமனத்தின்கால மாமெனவறைந்தார்மன்னோ. (அ௫)

பங்குனிமதிக்குநல்லோர் பகருமாவணிமதிக்கும்
பொங்கமாம்புரட்டாசிக்கும் புகல்நிசிநடுவிலென்றே
துங்கமாநாடி மூன்றுஞ் சோர்வறவிளங்குமென்று
இங்கிதமாகமுன்னோ ரியம்பியவாறதாமே. (அ௬

என்னெயிட்டிருக்கும்போது மீரமோடிருக்கும்போதும்
உண்ணுதல்செய்தபின்னு முயர்பசியுற்றபோதும்
திண்ணமாய்நடத்தலோடல் சிறந்தபோகஞ்செய்பின்னும்
கண்டுயில்கொண்டபோதுங் கலங்கிடுநாடிதானே. (அ௭)

### அஷ்டதானங் கூறல்.

அட்டமக்குறியாமென்ப ரங்கைகண்முகம்பண்ணுக்கு
விட்டிடுமலநீர்தேகம் விளம்புமிவ்வுறுப்போரெட்டாம்
இட்டமாநாடிபார்க்க வியம்புநூலறிந்துகொண்டு
மட்டிலாவியாதிபேத வகையினைத்தெளிகவன்றே. (அ௮)

ஆயுள்வேதப் போதலட்சணம்

முற்றிற்று.

சிவமயம்.

# திருமூலர் நாடியந்தாதி.

## நூல்.

உற்றவிவ ரூறுதியாமெந்நந்தி
பற்றியமூலம் பகர்ந்திடுநாடிதான்
எற்றியேயெண்ணிடி னெழுபத்தீராயிரம்
மற்றுதிற்பத்தும் வளமானநாடியே. (௧)

வளமானபத்தில் வழங்குதசவாயு
உளமாமிடபின்கலை சுழியென்றனர்
களமானசக்கரங் காட்டியதாறுண்டு
தளமானமண்டலந் தான்மூன்றுபாருமே. (௨)

பாருமிடகலை பின்கலைமாறியே
சாரும்பெருவிரற் காலொடுதானேறிக்
காருங்கழுத்திற் கபாலவரைநின்று
வாருமிடமா வலக்கரஞ்சாருமே. (௩)

வலக்கரந்தன்னில் வளமானபின்கலை
நிலைக்கவிடக்கர நின்றதிடகலை
துலக்கிடுமையஞ் சுழிமுனையோடிடும்
பிலக்கவிம்மூன்றுப் பிறந்ததுதாதுவே. (௪)

தாதுமுறையே தனியிடகலைவளி
போதுறுபின்கலை புகன்றிடும்பித்தமாம்
மாதேசுழிமுனை வகுத்திடுமையமாம்
ஓதுமுறைபார்த் துணர்ந்தவர்சித்தராம். (௫)

உணர்ந்தவபான னுற்றிடும்வாயுவில்
புணர்ந்தபிராணன் புகும்பித்தந்தன்னிலே
அணைந்தசமான னடங்கிடுமைதனில்
இணைந்திவைமூன்றி னியன்றகுறிகேள். (௬)

குறியாண்வலக்கரங் குவிந்தபெருவிரல்
மறியாததன்கீழ் வைத்திடுமூவிரல்
பிறியாததற்சனி பேசியவாதமாம்
அறிவாய்நடுவிர லாமதுபித்தமே. (எ)

பித்தத்தின்கீழே பிறங்கிடலையமாம்
உற்றுநீபார்க்கி லோர்நாடியேயோடும்
பற்றியமூன்றும் பாயும்வேகத்தால்
மத்திமைத்தாளம் போல்வழங்கிடுமே. (அ)

நாடியினளவு.

வழங்கியவாத மாத்திரையோரரை
தழங்கியபித்தந் தாமொருமாத்திரை
அழுங்குங்கபந்தா னதுக்காலொடிடின்
உழங்கியவுடலுக் கோர்குறையில்லை. (௯)

நாடி நடை.

இல்லையேவாத மெழினடைகோழியாம்
எல்லையிற்பித்த மெழும்புந்தவளைபோல்
ஒல்லையேயைய மூர்ந்திடும்பாம்புபோல்
வல்லையேகண்டறிந் தவர்கள்மாசித்தரே. (௧0)

அறிந்திடுவாத மடங்குமலத்தினில்
பிறிந்திடுபித்தம் பேராஞ்சலத்தினில்
மறிந்திடுமையம் வளமானவிந்துவில்
உறைந்திடுமூன்றுங் குறவாந்தலமிதே. (௧௧)

உறவாங்கறுப்புஞ் சிவப்புமாம்வாதம்
திறமானபச்சை நிறங்கொளும்பித்தம்
நிறைவானவெண்மை நிறத்ததேயையமாம்
அறைகுவர்மூன்றி னவிர்தலங்கண்டே. (௧௨)

தலங்காட்டியிந்தச் சடபஞ்சபூதம்
நிலங்காட்டி நீர்கால் நின்றதீகாட்டி
மலங்காமல்வான வெளிகாட்டியங்குக்
குலங்காட்டிநீங்காக் குடியிருந்தனவே. (௧௩)

இருந்தவிவ்வைந்தா லியன்றசரீரம்
பிரிந்துநற்றசையோ பிரிதிவின்கூறும்
சொரிந்திடுசோரிநீர் சொல்வரப்பென்றே
வருந்திடுவன்னி வளமாம்வெதுப்பே. (௧௪)

வெதுப்பதாக விடுபட்டுனாசியில்
எதிர்ப்புற்றுநிற்கு மென்பதாம்வாயு
கதுப்பொத்தவெல்லாங் ககனத்தின்சார்பால்
விதுப்புற்றுமேவும் விளம்பின்வளப்பமே. (கரு)

வளப்பங்கேள்பூமி வாசிக்குநாசியில்
களப்பெருவன்னி தானூருங்கண்ணினில்
அளக்கறுமப்போ வடங்கிடுநாவினில்
பளக்கறுகாலோ பரிசித்தியங்கும். (கசு)

இங்கியல்காலி லிருந்தூறுங்குண்டலம்
பொங்கியவைந்தனுள் பொல்லாவிம்மூன்றுமே
தங்கியவாய்வு சமர்த்தன்மாவாதமாம்
பங்கியவன்னி பகுத்திடும்பித்தமே. (கஎ)

பகுத்தசலத்தில் பாரிக்குமேயையம்
வகுத்தவிம்மூன்றால் வளருநோயெல்லாம்
அகக்கணூற்கண்டே யளவிட்ட யோகிகள்
வகுத்தேயிம்மூன்றின் வளமறிவாரே. (கஅ)

வாதபித்தசேற்மகுணங் கூறல்.

அறியவிம்மூன்றி னளவையெந்நந்தி
வறியநல்வாதம் வகுக்குங்குணங்கேள்
குறிகொளுங்கைகால் குளேச்சுநற்சந்து
பறிவுறவில்லாவும் பச்சைப்புண்ணுமே. (கசு)

புண்ணுவலிக்கும் பொருமும் வயிறுதான்
தண்ணுமலத்தைத் தான்கட்டும்பின்னும்
ஒண்ணுனசகன முறவேசுருக்கும்
பண்ணுங்குளிராம் பகுத்திடுவாயே. (உ0)

பகுத்திடும்பித்தம் பலபலவெண்ணமாம்
வகுத்திடும்வாக்கியும் வாயினீரூறலும்
தகித்திடுமேனியைத் தயங்கிடச்செய்யும்
மிகுத்திடுதவன விடமெனகைக்குமே. (உக)

விடங்கியவைய மேனிரைப்பேற்றிடும்
தடங்கியிருமித் தனிவிலாநொந்திடும்
அடங்காச்சுரமிகு முள்வருகோழையாம்
இடங்கீரல்வற்றி யிரத்தமுங்கக்குமே. (உஉ)

கக்கியமூன்றின் கனத்தடலன்கேள்
ஒக்கியவாயு வுடலினிற்கூடிடில்
மிக்கபலனு மேனிசீரிற்படின்
சிக்கியரோகங்ச் சிறக்கவிளக்கும். (உ௩)

விளக்கியவன்னி வாய்வுடன்கூடின்
தளக்கியதாபச் சுரங்காணுந்தோஷமாம்
வளக்கியவப்பும் வன்னியுங்கூடிடின்
இளக்கியசீத சுரங்காணிதன்பேர். (உ௪)

தோஷக்குறி.

பேரானதோஷம் பிறக்குமுறைகேள்
வாரானவாதமும் வன்னியுங்கறுப்பாம்
தாரான்வையக் தானுறின்வெண்மையாம்
சேராதபித்தம் சிவந்திடும்வாயுவில். (உ௫)

வாயுவடங்கிடின் வளறுதோஷம்போம்
வாயுவெழும்பினுன் மன்னுநீரொன்றிடும்
வாயுவுநீரும் வயங்கிடின்வன்னிசாம
வாயுவுமாகாச மண்டலவோசையே. (உ௬)

ஓசையிலேழு மொளியிலோரைந்தும்
நாசியின்மூன்று நாவிலிரண்டுமே
தேசியுந்தேசனுஞ் சேர்ந்துபிரிந்திடும்
மாசிலாநந்தி மகிழ்ந்துரைத்தாரே. (உ௭)

மரணக்குறிவருடமுதலியகூறல்.

உரைத்திட்டநாசி யுறுகுறிதனைக்கேள்
விரைத்திட்டபின்கலை விடாதொருமூன்றுநாள்
இரைத்திடிலுண்டி னெய்துவன்றென்புலம்
பரத்திலிரண்டேல் பகரீராண்டெண். (உ௮)

எண்ணியொருநா ளியங்கிடிற்பின்கலை
தண்ணுமூவாண்டிற் றப்பாதுமாரணம்
ஒண்ணுபயத்தி லோடிடிற்பத்துநாள்
மண்மாதமாறினில் மாளுங்குறியிதே. (உ௯)

குறிமூக்கன்றியே குலவியவாய்வழி
உறுமெனின்மூன்னா ளுயர்பதமடைவான்
தெறிதருமூன்றுந் திரண்டுமிக்குறின்
பருவறுமரணம் பகர்ந்தப்பாதே. (௩0)

தப்பாதுவாய்நீர்தான் தாக்கித்தன்மேல்விழின்
ஒப்பாகத்தனுமறைய வொழிந்திடுவன்மதியாறில்
செப்பாகந்தானிருக்கச் சேர்ந்தநிழலலைந்திடிறே
அப்பாகேளோராண்டி னறுங்காணிகொண்டிடுவான். ()

கொண்டிடுதோஷக் குறிசொன்னாரெந்நந்தி
தண்டுமுகடு தணிப் பல்லுநாக்கொன்றும்
மண்டிக்கறுத்து வயங்குமேயாமாயின்
ஒண்டிடுமாறுநா ளுறுதியாச்சாவானே. (௩௨)

உறுதியாய்ப்பித்த முடம்பிளைக்கச்செய்யின்
பொறையாகப்பாடைக்குப் போவான்மதியாறில்
அறுதியாமையுநல் லத்தியுலரச்செய்யின்
உறுதிசேரோர்மதியி லொடுங்கிடுமேநற்சிவன். (௩௩)

சிவகளையாச் செழித்திடு நாடியில்
ஆவக்கரம்வைத் திடினதேமேலேற்றும்
தாவொத்துமேனோக்கின் சாவானொருநாளும்
பாவொத்துக்கீழ்நோக்கின் பறையாமற்சாவானே. ()

பறைக்கின்றமுந்நாடி பாங்குவேறாகியே
நிறைக்கின்றவாதமும் பித்தமுநீங்கிடின்
சுறைக்கொண்டிருநாளு தோற்றியவுயிர்நீங்கும்
பறைக்கொளளிலபித்தம பலகநிலோசாவில்லை. (௩௫)

பித்தமடங்கிடிற் பேசாதொடுங்கிடும்
எத்தியவைய மெழுப்பின்யமன்கையைப்
பற்றிபீர்த்திடுவன் பகர்வாதமுற்றிடின்
சத்தியமாகச் சாவில்லையேறி. (௩௬)

அறிந்தவிம்மூன்று மடங்காமனின்றே
சிறந்தாடகின் செப்புவாய்சாவில்லை
பறிந்திடுநாடி புற்றிக்கீழோடிடின்
மறிந்தேயுயிர்தான் மறலிகைபபுகுமே. (௩௭)

புக்கியேயுந்தி பொருந்துகடைவிரல்
எக்கியுயர வெழும்பின்மகாதோஷம்
அக்கானவுந்தி யாதாரம்வாய்வுக்கு
வைக்குந்தலமென வகுத்தனர்தாதுவே. (௩௮)

தாதுநடக்குந் தனித்தலங்கேளுநீ
ஓது நதிகா லுயருந்திமார்புடன
நீதிலைகைம்மூலந் திகழ்சந்துகண்டம்
காதடியிருகரம் கவின்துண்டப்பார்த்திடே. (௩௯)

பார்க்கிற்றசநாடி பண்பாநடந்திடின்
தீர்க்கமாய்வாழ்வான் செப்புபிசகெனின்
வார்க்குழலாளே மறலியுலகினை
பார்க்கத்துணிவான் பகரிடலுண்மையே. (௪௰)

உண்மையாம்வாதமும் பித்தமுமூன்றிடின்
இன்மையாம்பித்த சுரம்பிறக்குமே
நண்ணியவையமும் நற்பித்தங்கூடிடின்
மண்ணில்வாழ்பவர்க்கு வருஞ்சீதசுரமே. (௪௧)

சுரமதாம்வாய்வுந் துயர்செயும்பித்தமும்
உரமாச்சரிவர வோடிடிற்றோஷமாம்.
திரமானவையமுஞ் சேர்பித்தமோர்நிறை
பரமாநடக்கின் பகருவாய்தோஷமே. (௪௨)

பகரிடும்பித்தமும் வாதமுநோய்த்
தகுநடைகொள்ளின் தான்தோஷமாகுமே
உறுமையபோரரை யொன்றாகவாதமும்
செகுபித்தமீரதாச் செறில்தோஷமாகுமே. (௪௩)

குமேபித்த மதிகமாய்வாதத்தில்
பாகுமேயாயின் புத்திமயக்கிடும்
வகமாயைய மேலிடினுள்மூன்றில்
போகுமேசீவன் புகலுதென்னுலகினில். (௪௪)

உலகுளமாந்த ரொளிர்நாடிமூன்றும்
திகிலுறப்படபடப் பாகினற்சன்னியாம்
இகலுறுமையமிவ் விருநாடிகட்கும்
அகலநடக்கினா ளொக்கினிற்போகுவன். (௪௫)

போகுமேபித்தமும் வாதமுந்தாழ்ந்தே
சேகானவையஞ் சிறின்மூன்னோயாம்
வாகானவர்த மடிநகையமேறுகின்
ஏகுவான்கூற்றனூ [illegible] ([illegible])

எண்ணுவாயையா விரும்பித்தமையமும்
நண்ணிடுமாயினன் மூன்றிற்சாவதே
திண்ணமாம்பித்தமுந் தெளிவாதமும்மரை
வண்ணமாமோடிடின் மரணமோநாளைந்தில். (௪௭)

ஐயமெழும்பி யடங்கிடின்மற்றவை
வையகம்விட்டு வாழ்வன்மறலியூர்
செய்யவோர்நாளிற் சீறியவையம்
எய்யவொன்றோடிடி னேமனுலகம்போம். (௪௮)

போகுமேவாதம் புளிப்பைமிகத்தரும்
பாகருபித்தம் பகர்ந்திடுகசப்பாம்
தேகிடுமையந் தித்திப்புமீறிடும்
ஆகவவற்றி னளவுமீறிடினே. (௪௯)

மீறியவைய மேவுகுதிரைபோல்
பாறிலோர்நாளில் பறக்குமுயிரே
சீறியவாதமும் பித்தமுமையமும்
கூறுசரியாக் கூறிலைந்நாழிகை. (௫௰)

நாழிகையென்று நாடிகீழ்நோக்கிடின்
வீழுவன்றோர்நாள் மேவியேவாதமும
தாழ்வுறுபித்தமுந் தான்சரியாகி
வாழ்வறுமையம் மயங்கின்வானேறுவன். (௫௧)

ஏறிடுநாடி யியல்பைநீகேளு
ஊறிடுசேத்தும முதயந்தனிலும்
மாறிடுபித்தம் வரும்பகல்தன்னிலும்
தேறிடுவாதஞ் சோமாலைப்போதிலும். (௫௨)

போர்தினிற்றப்பிடிற் பொருந்தியநோயுறும்
மேதினிமாந்தர் மேவுமுந்நாடியால்
வாஞ்தயடையும் வகையிதுவாமென
ஓதினாயுள் வேதவேதியரே. (௫௩)

திருமூலர் நாடியந்தாதி

முற்றுப்பெற்றது.